# ஆர்யதர்மம்
## புத்தகம் 5, ஸஞ்சிகை 6
## ஸித்தார்த்த, ஐப்பசி
## [October / November 1919]

Record no. 287

# *Āryatarmam*

*Puttakam 5, sañcikai 6*

*Sittārtta, Aippaci*

*[October / November 1919]*

Record no. 287




" வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. "

—(தேவாரம்.)

ஸித்தார்த்தஹு ஐப்பசிமீ

## பத்ராதிபர் குறிப்புகள்.

### தர்மப்ரசார வர்த்தமானம்.

1. மஹாமண்டலத்தின் 1918ஹுத்திய ரிபோர்ட்:— ஸ்ரீகாசி பாரத தர்ம மஹாமண்டலத்தின் சென்ற 1918 ஹுத்திய தர்ம கைங்கர்யத்தைக் குறிக்கும் ரிபோர்ட் கிடைக்கப்பெற்றோம். மண்டலத்தின் ஒவ்வொரு விபாகத்தின் பற்பல முயற்சிகளும் அதன் பலன்களும் அதில் பரக்கக்காணலாம். சில முக்கிய அம்சங்கள் சநாதந தர்மிகள் அனைவரும் கவனிக்கத்தக்கது. நடந்த யுத்த விஷயமாய், நமது அரசர்களும், குடிகளும், ராஜவிசுவாஸம் பூரித்து தேக க்ஷேமத்திற்கும் சக்ரவர்த்தியின் ஜயத்துக்

கும் எக்ஞரூபமாய் ஈசுவரப்ரார்த்தனை செய்து வந்ததும் சநாதந தர்மத்தை வேறறுக்க முயன்ற ஸ்ரீமான் படேல் கொண்டு வந்த ஹிந்து விவாகச் சீர்திருத்தமசோதாவைக் கண்டனம் செய்ததும், உத்தரகண்டத்தில் சிதிலமான ஜோஷிமடத்தை உத்தாரணம் செய்ய பெருமுயற்சி செய்தது ஒருவாறு கை கூடியதும், சாஸ்திரப்பிரகாச விபாகத்தின் வேலை பிரபலமானதும், உபதேசக மஹா வித்யாலயத்தின் மிகவும் திருப்திகரமான வேலையும், அதனின்றும் படிப்பு முடிந்து வெளிவந்த வித்தியார்த்திகளின் விசேஷமான நோக்கங்களும் அவர்கள் செய்யப்போகும் தர்மப்ரகாச வேலையும், மதசம்ரக்ஷண விபாகத்தின் காரியமும், இன்னும் மாகாணசபைகள் செய்தவேலைகளும், சென்ற வருஷ தர்மகாரியத்தின் விசேஷங்களாகும். அவைகள் விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கின்றன.

மஹாமண்டலத்தின் வரவு செலவு கணக்குகள் சோதனைசெய்து ப்ரசுரிக்கப் பட்டிருக்கிறது. மொத்த வரவு ரூ. 45484-7-11. ஆரம்பத்தில் இருப்பு ரூ. 5578-2-3 செலவு ரூ. 26672-7-2. கையிருப்பு ரூ. 24190-3-0.

மஹாமண்டலத்தின் பலவித தர்மகாரியத்துக்கு விகாதமில்லாமல் ஒருவாறு நடத்தி பிரதேசமன்னர்களும், பிரபுக்களும், அப்போதைக்கப்போது பொருளுதவி செய்து வந்தாலும் அகிலபாரதீய வைதிகதர்ம சமஷ்டி சபைக்கு, சநாதந தர்மிகள் பலரும் செய்துவரும் பொருளுதவி போதாது. அரசன் ஆறிலொருகடமை தான் குடிகளிடம் வாங்கவேண்டுமென்று சொல்லும் ஸ்மிருதியே, ஒவ்வொரு கிருகஸ்தனும் ஆறிலொருபங்கு மாத்திரம் தன் உபயோகத்துக்கு வைத்துக்கொண்டு, 3-ல் 2-ஐ தர்மங்களில் செலவு செய்யவேண்டுமென்று சொல்லுகிறது. ஒவ்வொரு சநாதந தர்மியும் தன் வரும்படி



யில் 10-ல் 1 தர்மத்துக்கு உதவினால் எவ்வளவோ நல்ல காரியங்கள் இந்தியா முழுவதிலும் மஹாமண்டலத்தால் சாதிக்கமுடியும். இவ்வருஷம் அந்தவிதம் உதவி செய்ய வேணுமாய் சநாதந தர்மிகள் அனைவரையும் வேண்டுகிறோம்.

2. கிளை சபைகள்:—(தென் இந்தியா). சென்ற ஸ்ரீ -த்தில் தஞ்சாவூரில் சநாதந தர்மகைங்கர்யம் செய்துவரும் ப்ரம்மஸ்ரீ பி. வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் முயர்ச்சியால், அந்நகரில் விளங்கிவரும், ஸ்ரீசங்கரசபையும், வர்ணாச்சரமசபையும், மஹாமண்டலத்தின் கிளைசபைகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டன.

(2) மன்னார்குடியில், பிரம்மஸ்ரீ ராமசாமி சாஸ்திரிகள் அவர்கள் உற்சாகத்தாலும் விடாமுயற்சியாலும், மஹாமண்டலத்தின் கிளை சபையாக ஓர் சநாதந தர்ம சபை ஏற்படுத்தப்பட்டு, அதில் பிரதி ஞாயிற்றுக்கிழமை தோறும் ப்ரம்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் தர்மசாஸ்திரம் உபந்யஸித்து வருகிறார்கள்.

3. கும்பகோணம் ஆஸ்திக பாலசமாஜம்:—இந்த சபை ஸ்ரீஜகத்குரு சங்கராசார்யஸ்வாமிகளின் அநுக்ரஹத்தையும், பெரியோர்களுடைய ஆதரவையும் பெற்று, கும்பகோணத்தில் ஆங்கிலம் கற்கும் வித்தியார்த்திகளுக்கு ஹிந்துமத போதனை பண்டிதர்களைக்கொண்டு அடிக்கடி செய்யப்பட்டு வருகிறது. இதன் காரியதர்சி ஸ்ரீமான் ஏ. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், இவரது ஸநாதநதர்மபக்தி சிரத்தை மிகவும் பாராட்டத்தக்கது. இவரது பெருமுயற்சியால் நமது ஸஹ கார்யதர்சிகள் ப்ரம்மஸ்ரீ ராவ்சாகேப் எல். ஏ. ரங்கசாமி அய்யர் அவர்கள் சென்ற அக்டோபர்-மீ 10-உயன்று வாஜபேயம் வீரராகவதாதாசாரியார் அக்ராசனம் வகிக்க ஸ்ரீசாரங்கபாணிஸ்வாமி சந்நிதியில் கூடிய சபையில் ஹிந்துமதச் சிறப்பைப் பற்றி ஒரு

உபந்யாஸம் செய்தார். மறுநாள் சமாஜத்தில் ஹிந்து மதச் சரித்ரசம்பந்தமான தூர் ஆக்ஷேபங்களையெல்லாம் கண்டித்து சநாதநதர்மத்தின் பெருமையையும் அதன் பயனையும் விரிவாக வித்யார்த்திகளுக்கு விளங்கவும் உள்ளம் மகிழவும் எடுத்துரைத்தார். பாலசமாஜத்தார் செய்துவருவதுபோல் மற்ற நகரத்திலுள்ள ஆங்கிலங்கற்கு மாணவர்களும் இவ்விதம் சத்காலக்ஷேபஞ்செய்ய முயலுவார்களேயானல் நம்முடைய தேசமும் ஜனங்களும் சீக்கிரம் க்ஷேமத்தை அடைவார்கள் என்பது திண்ணம்.

4. காரைக்குடி மதாபிமான சங்கம்:—இம்மை மறுமை இரண்டிலும் பயனடைவதற்குக் காரணமாகவுள்ள சநாதந தர்மத்தினிடத்து அபிமானம் வளர்தற்பொருட்டு உட்சமயத் துவேஷமின்றி ஹிந்துமத உண்மைகளையும், பெருமையையும் எடுத்து ஜனங்கட்குப் போதித்துவருதல், இதற்கு வேண்டிய கல்வியை யபிவிர்த்தி செய்தல், தற்கால உலக அறிவை வளரச் செய்தல், தேசபாஷாபிமானத்தையும், அறிவையும், சன்மார்க்கத்தையும் வளரச் செய்தல் என்ற இவைகளை நோக்கமாகக்கொண்டு இந்தச் சங்கம் பிங்கள-ஹூ ஆவணி-மீ 26-உயில் காரைக்குடியில் ஸ்தாபிக்கப் பெற்று நகரத்தாரால் நன்று பரிபாலிக்கப்பட்டு இரண்டு வருஷமாக நன்று நடைபெற்று வருவதாக நமக்குக் கிடைத்த இரண்டாவது வருஷ அறிக்கைப் பத்திரத்தால் விளங்குகிறது.

சென்ற ஹூ-த்தில் விவேகானந்தர் பிறந்த நாளும், ஸ்ரீராமகிருஷ்ணஸ்வாமிகளின் பிறந்த நாளும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டன. மற்றும் அரிய பெரிய விஷயங்கள் பல வித்வான்களால் சபையில் பிரஸங்கம் செய்யப்பட்டிருக்கின்றன.

வெளியூரில் ப்ரசங்கங்கள் செய்துவரத்தக்க ஏற்பாடு



கள் சபையார் செய்திருக்கிறார்கள். சபை ப்ரசங்கியார் ப்ரம்மஸ்ரீ நெ. ஸ்ரீ. விசுவநாதசாஸ்திரிகள் திருவையாறு, மாயூரம், திருவண்ணாமலை, திருப்பாதிரிப்புலியூர், சிதம்பரம் சீகாழி, வைத்தீஸ்வரன்கோவில், கொந்தளம், வேலூர், தஞ்சாவூர், திரிச்சினப்பள்ளி, புதுக்கோட்டை, இராமநாதபுரம், இராமேஸ்வரம், கோவிலூர், குன்றக்குடி, கல்லல், திருப்பத்தூர், சிவகெங்கை, நாச்சியார்புரம், கானேயார் கோவில், தேவகோட்டை, காரைக்குடி முதலிய ஊர்களில் 107 உபந்யாஸங்கள் செய்திருக்கிறார்கள். சாஸ்திரிகள் அவர்கள் செய்த கைங்கரியம் மிகவும் கொண்டாடத்தக்கது. இவரைப் போல் இன்னும் சிலர் இந்தக் காரியத்துக்குமுன் வருவார்களானால் சநாதந தர்மம் எங்கும் பரவி தழைத்தோங்கும் என்பதற்கையமில்லை.

சபையார்கள் விவேகாநந்த புத்தகசாலை என்று திருப்பெயர் வகித்த ஒரு லைப்ரரியையும் அமைத்திருக்கிறார்கள். இதில் சம்ஸ்கிருத புத்தகங்களும், 977 தமிழ் புத்தகங்களும், 41 ஆங்கிலப் புத்தகங்களும் இருக்கின்றன. மதவிஷய ப்ரஸங்கங்கள் 6 துண்டுப் புத்தகமாய் அச்சிட்டு இனமாய் 3000 புத்தகங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன.

பின்னும் சபையின் நோக்கம் நிறைவேறுமாறு, தேசபாஷைப் பயிற்சிக்காக பகவான் ஸ்ரீராமகிருஷ்ணஸ்வாமிகள் ஞாபகார்த்தமாய், ஸ்ரீராமகிருஷ்ண கலாசாலையொன்று காளயுக்தி-ஹூ தை-மீ 27-உ ஸ்தாபிக்கப்பெற்று மாணவர்கட்கு இலவசமாக தமிழிலக்கிய இலக்கண பாடங்கள் கற்பிக்கப் பெறுகின்றன. பண்டித ப்ரம்ஹஸ்ரீ சு. சிதம்பரமய்யர் அவர்கள் உபாத்தியாயராய் அமர்ந்து கற்பித்துவருகிறார்கள்.

நகரத்தார்கள், பெரிய தனவந்தர்கள், மிகுந்த தர்மம் செய்பவர்கள் அவர்கள் தர்மத்தால் தான் அநேக கோயில்

திருப்பணிகளும், வேதாத்யயன பாடசாலைகளும், அன்ன சாலைகளும் பரதகண்டமெங்கும் நடைபெற்று வருகின்றன. தர்மமே அர்த்தத்தை அளவிலாது கொடுக்கும் என்பதை நன்றாய்க் கடைபிடித்து, நம்முடைய மதத்துக்கும் ஆசாரத்துக்கும் இக்காலத்தில் இரக்ஷகர்களாகவிருக்கிறார்கள். இதுபோன்ற அநேக ஸபைகளையும் பலவிடங்களிலும் அவர்கள் ஸ்தாபித்து நடத்த வல்லவர்கள், அங்ஙனம் செய்துவருமாறு நாம் வேண்டுகிறோம். கார்யதர்சிகள் ராய. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களும், அரு. ராம. அருணாசலம் செட்டியார் அவர்களும் செய்துவரும் தர்ம கைங்கரியமும் அதிலுள்ள சிரத்தையும் நாம் நிரம்பக் கொண்டாடுகிறோம்.

5. அகிலபாரதீய ஹிந்துமகாசபை:—இது விஷயமாய் இந்த சபையானது தைமீ-த்தில் நடைபெறலாமென்று எதிர்பார்த்திருந்தும், அதற்காக ஏற்பாடுகள் ஒருவாறு அமைக்கப் பெற்றும், அக்காலத்தில் சில முக்யமான பிரபுக்களுக்கும், உத்யோகஸ்தர்களுக்கும், வித்வான்கள் அன்பர்களுக்கும் சாவகாசமாய் வரக்கூடாமை பற்றி வரவேற்கும் கமிட்டியார் ஷை மஹாசபையானது பின்னர் கூட்டப்படும் என்றும் அந்தக்காலம் சம்ரக்ஷகர்கள் சௌகரியம் தெரிந்து தெரிவிக்கப்படும் என்றும், அக்ராஸனாதிபதி ஸ்ரீமான் கனம் கொ. வா. ரெங்கஸாமி அய்யங்கார் மூலமாய் அவர்கள் தெரிவிக்கிறார்கள். நமக்குத் தற்செயலாய் கிடைத்திருக்கும் அவகாசத்தில் சபை கூடுவதற்கு முன்னரே, சநாதந தர்மிகள் அனைவரும் பல ஊர்களிலும் தர்மசபை ஸ்தாபித்து, மஹாமண்டலத்தின் கிளையாக்கி, தக்கவாறு உதவிபுரியவேணுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

டி. வி. சாமிநாதய்யர்.

ப்ரதான காரியதர்சி,



## வேதங்கள் நித்யங்களே.



ஸ்ரீ வியாஸபகவானும்கேவலயுக்திக்குஎல்லை கிடையாதானபடியால் கேவலயுக்திவாதம் செய்யக்கூடாதென்று தர்காப்ரதிஷ்டாநாத் । என்ற ஸூத்திரத்தால் வெளியிட்டார். நாம் இங்கு யுக்தியே கூடாதென்று சொல்லவரவில்லை. சொல்லும் யுக்தியானது நமது சாஸ்திரங்களை அநுஸரித்து இருக்கவேணுமென்றும் அந்த யுக்திதான் தர்மாதர்மங்களை நிர்ணயிக்க காரணமென்றும் சொல்லுகிறோம். இந்த விஷயத்தை தான் மநு மகர்ஷி ஆர்ஷம் தர்மோபதேசஞ்ச வேதசாஸ்த்ராவிரோதிநா । யஸ்தர்கேணாநுஸந்தத்தே ஸ தர்மம் வேத நேதர: ॥ என்று கூறியுள்ளார். ஆகையால் நம் சிரோமணி சில வேதத்தை மட்டும் குறிப்பிட்டு மேற்றிசைவிமர்சகருடைய கட்டுக்கதையை ஆதாரமாகக் கொண்டு நமது ஹிந்துமதத்திற்குறிய பிரமாணங்களை நம்பாமல் அவர் எழுதினர் இவர் எழுதினர் என்று எப்படிச் சொல்லத் துணிந்தாரோ தெரியவில்லை. நமது ஹிந்து மதத்திற்கு அடிப்படையான பிரமாணம் வேதமொன்றே என்பதில் எந்த ஹிந்துக்களுக்குமாக்ஷேபமில்லை. அப்படிப்பட்ட வேதத்திற்கு யாதொருவிதமான குறைவு ஏற்படாமலிருக்குமாறு வேதத்திற்குப் பிறகு மீமாம்ஸை முதலானதுகள் ஏற்பட்டனவென்பதிலும் ஸம்சயமில்லை. அப்படிப்

பட்ட வேதத்தில் எதாவது ஸம்சயமேற்படுமாகில் அந்த ஸம்சயத்தை வேதத்தை பிராணனுகபாவித்துவந்த நமது முன்னேர்களுடைய அபிப்பிராயத்தை நன்று கண்டு பிடித்து அதனாலே ஸம்சயத்தை தீர்த்துக்கொள்ள வேணுமே தவிர வேதபாஹ்யர்களுடைய அபிப்பிராய த்தை முன்னிட்டு நமது பிரமாணங்களை தாறுமாறாக அர்த்தம் செய்வதும் அப்படியே ஆங்காங்கு பத்திரிகை களில் எழுதுவதும் மிக்க பரிஹஸிக்கத் தகுந்ததே. இந்த அர்த்தத்தைத்தான் வைதிகப் பிரஸித்தமான அர்த் தத்திற்கும் வேதபாஹ்யர்களான மிலேச்ச மதத்தில் பிர ஸித்தமான அர்த்தத்திற்கும் விரோதம் வந்தால் வைதிக பிரஸித்தமான அர்த்தத்தைதான் அங்கீகரிக்கவேணுமெ ன்று சொல்லுகிற ஆர்யம்லேச்சாதிகரணத்தால் ஜை மினி வெளியிட்டார். ஆகையால் பிரமாணத்திற்குக் கட்டுப்பட்ட எந்த ஹிந்துக்களும் வேதங்களெல்லாம் அநாதிநித்யங்கள் அவைகளை யாரும் எழுதவில்லை என்று ஒப்புக்கொண்டே தீரவேண்டும். இங்கு நம் சிரோமணி ஈச்வரசம்பந்தத்தினுல் வேதம் நித்தியமாகப் போகக்கூடா தென்கிற ஆக்கிரஹத்தினுல் மீமாம்ஸகர்கள் ஈச்வரனை ஒப்புக்கொள்ளவில்லையே தவிர வேறு யாது காரணம் பற்றியுமில்லையென்று வேதமநித்தியமென்பதற்கு மற் ருெரு யுக்தி சொல்லுகிறர். இந்த ஆக்ஷேபமும் மீமாம் ஸகமதத்திலுள்ள தத்வார்த்தத்தை நன்ருய் முன்னேர்களி டமிருந்து தெரிந்துகொள்ளாததால் வந்ததென்று ரஸி கர்களான மீமாம்ஸகர்களுக்கு நன்று விளங்கும். இங்கு மீமாம்ஸகர்கள் தேவதைகளையும் ஈச்வரனையும் நிராகரித் தது வேதத்திற்கு எந்தபாகத்தாலும் அநித்யத்வம் பௌரு ஷேயத்வம் முதலானதுகள் ஏற்படக்கூடாதென்கிற மிகு ந்த ஆக்கிரஹத்தினுல் என்று தோன்றுகிறது. அக்னி



முதலான தேவதைகளைச் சரீரத்துடன் ஒத்துக்கொண் டால் வேதங்களில் பெரும்பாலாக அக்னி முதலான சப்த ங்கள் காணப்படுகிறபடியால் அந்த அநித்யமான அர்த்த ஸம்பந்தத்தால் வேதத்திற்கு அநித்யத்வம் ஏற்பட்டுவிடும். ஈச்வரனை ஒப்புக்கொண்டாலும், ஈச்வரன்தான் வேதத்தை யுண்டுபண்ணினவன் என்று பலமதங்கள் இருக்கிறபடி யால் அதனுல் வேதத்திற்குப் பௌருஷேயத்வமும் ஏற் பட்டுவிடும். இவ்விதமான ஆக்ஷேபமும் ஸமாதானமும் அனுவச்யமென்று ஈச்வரனையும் தேவதைகளையும் ஒப்புக் கொள்ளவில்லையென்று நன்ருய் ஏற்படுகிறது. கர்மா நுஷ்டானத்திற்கு மிக்க ஏற்றத்தை சொல்லவேண்டுமாறு தேவதை முதலானவைகளை நிராகரித்தார் ஜைமினியென் றும் ஒரு ஸமாதானம் சொல்லலாம். வேதத்திற்கு எந்தக் காரணத்தாலாவது அப்பிராமாண்யத்தை ஏற்படுத்தவே ணுமென்று நோக்கமுள்ள பௌத்தஸாங்கிய முதலான நாஸ்திகர்களை நிராகரிக்கவேண்டுமாறு தனக்கு இஷ்டதம மான ஈச்வரன் முதலானதுகளைக் கூட கைவிட்ட ஜைமி னிக்கு வேதமநித்யமென்று தான் தாத்பரியம் என்று நம் சிரோமணி சொல்லியதை வைதிகர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இவ்வேதம் நித்யமாகில் அதில் காணப்படு கிற வஸிஷ்ட விசுவாமித்ர ஜமதக்னி முதலிய அநேக மகர்ஷிகளின் பெயரும், ஸௌராஷ்டரம் பாஞ்சாலம், குரு க்ஷேத்திரம் முதலிய தேசங்களுடைய பெயரும் காணப்ப டுகிறபடியால் வேதம் நித்தியமென்றும் அநாதியென்றும் சொல்வது எப்படி தகுமென்றும் நமது மேதாவிகள் ஆக்ஷேபிப்பார்கள். இதுவும் நமது சாஸ்திரங்களுடைய தத்வார்த்தத்தை தெரிந்துகொள்ளாதத்தால் வந்த ஆக்ஷே பமேயாகும். இவ்வாக்ஷேபமும் இதற்கு சொல்லப்போகிற சமாதானமும் புதிதல்ல. இதுகளை நமது பூர்வமீமாம்ஸை முதலிய கிரந்தங்களில் பரமகாருணிகர்களான மகர்ஷிகள்

விசாரித்து ஸித்தாந்தம் செய்து இருக்கிறார்கள். இதை இங்கு சுருக்கிச் சொல்லுவோம். வேதம் சப்தரூபபிர மாணமானபடியால் வேதம் நித்யமென்றால் அதில் காணப் படும் சப்தங்கள் அர்த்தங்கள் எல்லாம் நித்யங்களென்றே சொல்லாமலே விளங்கும். இவ்வர்த்தத்தை ஜைமினி ஔ-த்திகஸூ ஸூத்ரத்தில் என்கிற ஸூத்திரத்தினால் ஸ்தாபித்தார். ஆனால் ஸ்ரீராமபிரான் காலத்திலிருந்த வசிஷ்டர் விசுவாமித்திரர் முதலான மஹர்ஷிகளைப்பற்றிச் சொல்வதே என்றால் அதனாலும் பாதகமில்லை. தற்போது உலகநடவடிக்கைகளில் கூட ஜனங்களை நீதிதவறாமல் ஸம் ரக்ஷிக்கவேண்டியதற்காக கவர்னர், கலெக்டர், தாசில்தார் என முறை, பற்பல அந்தஸ்தும் அதிகாரமும் பொருந்திய லக்ஷக்கணக்கான அதிகாரிகள் ஏற்பட்டு இருப்பதுபோல் ஈச்வரனும் ஒவ்வொரு ஸிருஷ்டிகாலத்திலும் தன்னால் ஸிருஷ்டிக்கப்பட்ட பிரஜைகள் யாவரும் நீதிதவறாமல் தர்மாதர்மங்களை நன்கு தெரிந்துகொண்டு ஸ்வதர்மத் தைக் கைவிடாமல் செய்துவரவேண்டியதற்காக பற்பல அந்தஸ்து அதிகாரங்கள் இவைகளுடன் மனு, வியாஸ, வஸிஷ்ட முதலிய உத்தியோகப் பெயரை இட்டு ஸிருஷ் டித்து அனுப்புகிறார். அப்படிப்பட்ட ரிஷிகளுக்கு ஆதி காரிகர்கள் அதாவது அதிகாரிபுருஷர்கள் என்று நமது சாஸ்திரங்களில் வியவஹரிக்கப்படுகிறது. இதனால் நாம் தெரிந்துகொண்டதென்ன. வேதங்களில் காணப்படும் மனு முதலான பெயரெல்லாம் உத்தியோகத்தின் பெயரே யல்லது உத்தியோகத்தை வகிப்பவரின் பெயரல்லவென் பதே. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் பராசரபகவான் சொல் லும்போது முன்னொருயுகத்தில் என் தகப்பனார் வியாஸ னாகயிருந்தான். நான் ஒரு யுகத்தில் வியாஸனாகயிருந்த துண்டு. தற்போது என் குமாரன் வியாஸனாகயிருக்கி றான் என்றார். இதனால் வேதங்களைப் பிரிப்பது என்கிற



காரணப் பெயரால் வியாஸர் என்கிற பதம் உத்தியோகப் பெயர் என்பது நன்று விளங்குகிறது. இதுபோல் மனு முதலான உத்தியோகப் பெயரும் காரணப் பெயரேயா கும். தற்போது தாசில்தார், கலெக்டர் முதலானவர்களை அவரவர்களுக்குத் தனித் தனியாக பெயரிருந்தும்கூட ஜனங்கள் எப்படி உத்தியோகப் பெயர்களாலே வியவஹ ரிக்கிறார்களோ அப்படியேதான் ராமாயணாதிகளில் வஸிஷ் டர் முதலானவர்களை உத்தியோகப் பெயர்களாலேயே வியவஹரிக்கிறார்கள். வேதங்களிலும் புராணங்களிலும் காணப்படுகிற இவ்விருபதங்களுக்கு தாரதம்யமுண்டு. அதாவது வேதத்திலுள்ள பதம் அவர்களுடைய உத்தி யோகத்தை மட்டும் குறிக்கும். உத்தியோகமனதியாயி ருப்பதில் தடையில்லை. புராணங்களில் காணப்படுகிற வஸிஷ்டாதிசப்தங்களோ அவ்வப்போது உத்தியோகத் தை வஹிப்பவர்களையும் குறிப்பிடும். ஆகையால் வேதத் தில் காணப்படுகிற பெயரைக்கொண்டு வேதத்திற்கு அநி த்யத்வம் போகாது. தவிர வேதத்தை நன்றாயறிந்த அநேக மகர்ஷிகளுக்கு தற்கால ஞானமிருப்பதை நாம் புஸ்தகங்க ளில் படித்து பார்த்திருக்கிறோம். அப்படியிருக்க இனி வரப்போகிற காலஸ்திதியை அறிய வேதத்திற்கு ஏன் சக்தியிருக்கக் கூடாது. ஆகையால் தான் வேதமானது தன் காலத்திற்கு பிறகுவரப்போகிறதை கூட குறிப்பிட்டு அநேக கதைகளையும் குருக்ஷேத்திரம் முதலிய தேசங்க ளின் பெயரையும் சொன்னதாக ஏற்படத் தடையில்லை. வேதத்தினுடைய சக்தியையும் கௌரவத்தையும் ஸரியா வறிந்த ஸ்ரீசங்கராசாரியர் தனது சாஸ்திரயோநித்வாதி கரணபாஷ்யத்தில்

महत ऋग्वेदादेः शास्त्रस्य अनेकविद्यास्थानोपबृंहितस्य प्रदीपवत्स-र्वार्थावद्योतिनः सर्वज्ञकल्पस्य । மஹத ருக்வேதாதே: ஶாஸ்த்ரஸ்ய அநேகவித்யாஸ்தாநோபப்ரும்ஹிதஸ்ய ப்ரதீபவத்ஸர்வா-

[illegible] । என்று வேதத்தினுடைய சக்தி கௌரவம் முதலியதுகளைச் சுருக்கி கூறியுள்ளார். ஆகையால் வஸிஷ்டாதி சப்தங்களால் வேதத்திற்கு நித்தியத்வம் போகாதென்பது திண்ணம். இந்த அர்த்தத்தைதான் வியாஸபகவான் தனது கிரந்தத்தில்

शब्द इति चेन्नात:प्रभवात्प्रत्यक्षानुमानाभ्यां । अत एव च नित्यत्वं । समाननामरूपत्वाच्च व्यावृत्तावप्यविरोधो दर्शनात्स्मृतेश्च । [illegible] । என்கிற ஸூத்திரங்களால் பிரகாசமாக வெளியிட்டார். இந்த ஸூத்திர பாஷ்யத்தில் ஸ்ரீ ராமாநுஜாசாரியர் एतदेव वेदस्यापौरुषेयत्वं नित्यत्वं च यत्पूर्वपूर्वोच्चारणक्रमजनितसंस्कारेण तमेव क्रमविशेषं स्मृत्वा तेनैव क्रमेण उच्चार्यत्वं तदस्मास्वपि । समानं लयांस्तु विशेषः संस्कारानपेक्षं स्वयमेवानुसंधत्ते पुरुषोत्तमः ॥ [illegible] ॥ என்று கீழ் சொன்ன ஸூத்திரங்களால் வேதத்திற்கு ஏற்பட்ட நித்யத்வத்தையும் அபௌருஷேயத்தையும் விளக்கிக்காட்டினர். வேதம் நித்யம் அனாதியென்பதற்கு இன்னும் அநேகப் பிரமாணங்கள் இருந்தாலும் அதை இங்கு விஸ்தாரபயத்தால் நிறுத்திவிடுகிறோம்.

(இன்னும் வரும்).

தாததேசிகதாதாசாரியார்.

---



# ஸ்ரீமத்பகவத்கீதை.

(முன்தொடர்ச்சி)

ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥ १४ ॥

மேலே சொன்ன சங்கம், பேரீ முதலானவைகளாலுண்டான சப்தமானது பாண்டவர்களுக்கு உத்ஸாகத்தையே கொடுத்தது பயத்தைக் கொடுக்கவில்லை என்று பாண்டவர்களின் யுத்தப் பிரவிர்த்தியைச்சொல்லுகிறார்.

ततः மேலே சொன்ன அதிக சப்தத்தைக்கேட்ட பிறகு श्वेतैः சுக்லவர்ணமுள்ள हयैः குதிரைகளால் युक्ते கட்டப்பட்ட महति அக்னி பகவானால் கொடுக்கப்பட்ட பூஜ்யமான स्यन्दने ரதத்தில் स्थितौ இருந்த माधवः ஸ்ரீகிருஷ்ணரும் पाण्डवश्चैव அர்ஜுனனும் दिव्यौ அப்ராக்ருதமான शङ्खौ சங்கங்களை प्रदध्मतुः நாதம் செய்தார்கள். माधवः என்ற பதத்தால் பகவான் தன் சங்கநாதத்தினாலேயே துர்யோதனாதிகளுடைய ராஜ்யலக்ஷ்மியை அபஹரித்தார் என்று காண்பிக்கப்பட்டது. पाण्डवः என்ற பதத்தால் பாண்டவர்களுடைய ராஜ்யம் அவர்களுக்கே கிடைக்கப்போகிறது என்றும் காண்பிக்கப்பட்டது.

पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनंजयः ।
पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥

மேற்சொன்னதைத் தெளிவாய்ச் சொல்லுகிறார்.—

हृषीकेशः கிருஷ்ணபகவான் पाञ्चजन्यम् பாஞ்சஜன்யத்

தையும், धनंजयः அர்ஜுனன் देवदत्तम् தேவதத்தத்தையும், भीमकर्मा பயங்கரமான கார்யங்களைச்செய்யக்கூடிய वृकोदरः பீமஸேனன் पौण्ड्रम् பௌண்டிரம் என்ற महाशङ्खम् பெரிய தான சங்கத்தையும் दध्मौ ஊதினார்கள். हृषीकेशः என்ற பதத்தால் இந்திரியங்களுக்கு ஈசனான பகவான் பாண்டவர்களுடைய புஜம் முதலானவைகளுக்கு பலத்தைக்கொடுக்கிறவர், சத்துருக்களின் புஜபலத்தை அபஹரிக்கிறவர் என்று காண்பிக்கப்பட்டது. धनंजयः என்ற பதத்தால் அர்ஜுனன் திக்விஜயத்திலும், கோ கிரஹத்திலும் பீஷ்மரையும், இன்னும் மற்ற அரசர்களையும் ஜயித்து ஏராளமான திரவியத்தையும் பசுக்களையும் கைப்பற்றுக் கொண்டான். ஆகையால் எவராலும் ஜயிக்கமுடியாதவன் என்று காண்பிக்கப்பட்டது.

अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

कुन्तीपुत्रः குந்தீ தேவியின் குமாரராயும் राजा அரசராயுமிருக்கிற युधिष्ठिरः யுதிஷ்டிரர் अनन्तविजयम् அனந்தவிஜயம் என்ற சங்கத்தை ஊதினார். नकुलः நகுலன் सहदेवश्च ஸஹதேவனும் सुघोषमणिपुष्पकौ கிரமமாக ஸுகோஷம், மணிபுஷ்பகம் என்ற சங்கங்களை ஊதினார்கள். राजा என்றபதத்தால் சத்துருக்களை ஜயித்து நிஷ்கண்டகராஜ்யலாபமானது அவருக்கே கிடைக்கப்போகிறது என்று காண்பிக்கப்பட்டது. कुन्तीपुत्रः என்ற பதத்தால் குந்தீதேவியால் பெருந் தவம் புரிந்து தர்மராஜனைத் திருப்தி செய்து அடையப்பட்டவரென்றும் காண்பிக்கப்பட்டது.

काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।
धृष्टद्युम्नो विराटश्च सात्वकिश्चापराजितः ॥ १७ ॥
द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक् पृथक् ॥ १८ ॥



पृथिवीपते பூபதியே, கவனமாய்க்கேளும்; परमेष्वासः சிறந்த தனுஸ்ஸையுடைய काश्यः காசிராஜன், महारथः மஹாரதனான शिखण्डी (शिखण्डं श्मश्रुशून्यता முகத்தில் மீசையில்லாமலிருத்தலுக்கு शिखण्डम् என்று பொருள்.) அதாவது பாஞ்சாலன், धृष्टद्युम्नः திருஷ்டத்யும்னன் (பிறரை அவமதிக்கக்கூடிய பலமுடையவன் என்று பொருள்.) विराटश्च விராடன் अपराजितः எங்கும் அபஜயமடையாத सात्यकिः ஸாத்யகி, द्रुपदः துருபதன், द्रौपदेयाश्च திரௌபதியின் குமாரர்கள். महाबाहुः தீர்க்கமான பாஹுக்களையுடைய सौभद्रः ஸுபத்திரையின் குமாரன் இவர்கள் எல்லோரும் सर्वशः ஸர்வப்பிரகாரமாய் पृथक् पृथक् தனித்தனியாக शङ्खान् சங்கங்களை दध्मुः ஊதினார்கள். पृथिवीपते என்ற பதத்தால் பூமிபோல் துக்கத்தை ஸஹிக்க யோக்கியராயிருக்கிறீர் என்று காண்பிக்கப்பட்டது.

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥ १९ ॥

सः அந்த घोषः சப்தமானது பாஞ்சஜன்யம், தேவதத்தம், பௌண்டிரம் முதலான மஹா சங்கங்களிலிருந்துமுண்டான சப்தமானது, तुमुलः எங்கும் வியாபித்துக்கொண்டு नभः ஆகாசத்தையும் च என்றபதத்தால் ஸகல திக்குகளையும், पृथिवीम् பூமியையும் च என்ற பதத்தால் மலைகுகைகளையும் व्यनुनादयन् பிரதி துவனி உண்டாகும்படி செய்துகொண்டு धार्तराष्ट्राणाम् திருதராஷ்டிரனுடைய புத்திரர்கள் பௌத்திரர்கள், ஸேனைகள் இவர்களுடைய हृदयानि இருதயங்களை व्यदारयत् பிளந்தது. அதாவது பிளத்தலின் பீடையைப்போல் பீடையைக்கொடுத்தது.

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान्कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पान्डवः ॥ २० ॥

महीपते அரசனே கேளும் अथ இரண்டு பக்ஷ ஸைனி

யங்களுடைய யுத்த ஸன்னாஹத்திற்குப் பிறகு व्यवस्थितान् பாண்டவர்களுடைய பயங்கரமான சங்கத் தவனியைக் கேட்டும் பயந்து ஓடிப்போகாமல் யுத்தத்திற்குத்தயாரா யிருந்த धार्तराष्ट्रान् திருதராஷ்டிர ஜனத்தாரை दृष्ट्वा பார்த்து शस्त्रसंपाते ஆயுத ஸமுதாயமானது प्रवृत्ते பிரயோகாபிமுகமா யிருக்கும்பொழுது कपिध्वजः ஹனுமாரை த்வஜமாயுடைய पाण्डवः அர்ஜுனன் धनुः வில்லை उद्यम्य கையிலெடுத்துக் கொண்டு,

हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

हृषीकेशं ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்து इदम् பின் வரும் இந்த वाक्यम् வசனத்தை तदा அப்போது आह சொன்னான். 20வது சுலோகத்தில் पाण्डवः कपिध्वजः, என்ற பதங்களால் அர்ஜுனன் அதி சூரனான பாண்டுவின் குமாரன் என்றும், ஸீதா தேவியின் ரூபத்தை யடைந்த ஸாக்ஷாத் லக்ஷ்மீ தேவியை பகவானான ஸ்ரீராமசந்திரனிடம் சேர்த்த ஆஞ்ச னேயர் பாண்டவர்களின் சத்துருக்களை வதம் செய்து அவர்களுக்கு ராஜ்ய லக்ஷ்மீயைக் கொடுக்கப்போகிறார் என்று காண்பிக்கப்பட்டது.

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥
यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥

अच्युत, கிருஷ்ண, अहम् நான் योद्धुकामान् யுத்தம் செய்ய அபிப்பிராயமுள்ளவர்களாயும் ஆகையால் व्यवस्थितान् ஸே னைகளைத்தயார் செய்து யுத்தத்திற்காக வந்திருக்கிறவர்க ளுமான एतान् இந்தப் போர்வீரர்களை यावत् எந்த இடத்தி லிருந்து निरीक्षे (பார்ப்பேனே அப்படிப்பார்த்து) कैः सह எவர்களுடன் मया என்னால் अस्मिन् இந்த रणसमुद्यमे யுத்த வியாபாரத்தில் योद्धव्यम् யுத்தம் செய்யப்பட வேண்டிய தென்று அறிவேனோ அந்த இடத்தில் उभयोः सेनयोः இரண்டு



ஸேனைகளுக்கும் மத்தியில் मे என்னுடைய रथम् ரதத்தை स्थापय நிறுத்து. अच्युत என்ற பதத்தால் எவனுக்கு ஸா க்ஷாத் பரமேசுவரரே ஸாரதியாயிருக்கிறனோ, பிராகிருத ஸாரதி போல அர்ஜுனனால் தேரை நிறுத்து என்று ஏவப் படுகிறனோ அந்த மஹானுபாவனுடைய விஜயத்தில் என்ன ஆச்சரியம் என்று சிலர் சொல்லுகிறார்கள். இரண்டு ஸேனைகளுக்கும் மத்தியில் நான் ரதத்தை நிறுத்தும் சம யம் பார்த்து என்னை ரதத்திலிருந்து எதிரிகள் தள்ளிவிட் டால் என்ன செய்கிறது என்ற பயமே தங்களுக்கு இல்லை. ஏனென்றால் தாங்கள் அச்யுதர். ஸ்வபாவத்திலிருந்து நழுவாதவர். தேசம் காலம் வஸ்து இவைகளில் எப்பொ ழுதும் நழுவாமலிருக்கிற தங்களை யாரால் நழுவச்செய் யக்கூடும் என்று சிலர் சொல்லுகிறார்கள்.

योत्स्यमानानवेक्ष्येऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

दुर्बुद्धेः மூடனான धार्तराष्ट्रस्य துர்யோதனனுக்கு युद्धे யுத் தத்தில் प्रियचिकीर्षवः யுத்தத்தினால் இஷ்டமான தனத்தைச் சம்பாதித்துக்கொடுக்க விரும்பினவர்களாய் अत्र இந்த குருக்ஷேத்திரத்தில் ये எந்த एते இவர்கள் समागताः வந்தி ருக்கிறார்களோ அந்த योत्स्यमानान् யுத்தம் செய்யப்போகிற வீரர்களை अहम् अवेक्ष्ये நான் பார்க்கிறேன். அவர்களுடைய பெயர், குலம், ஸம்பந்தம் இவைகளை எப்படி அறிவேனோ அப்படி ரதத்தை நிறுத்து.

संजय उवाच—

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥
भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान्समवेतान्कुरूनिति ॥ २५ ॥

பிறகு என்ன நடந்தது என்று சொல்லுகிறார். ஸஞ்சயர் சொல்லுகிறார்— भारत பரதவம்சத்திலுதித்த திருதராஷ்டிரமஹாராஜனே, गुडाकेशेन அர்ஜுனனால் (अङ्गुष्ठतर्जनी-योगो गुडानाम्नी तु मुद्रिका கட்டைவிரல் ஆள்காட்டிவிரல் இவைகளுடைய சேர்க்கையான முத்திரைக்கு குடா என்று பெயர். அந்த முத்திரையின் பிரமாணமுள்ள அக்ர கேசங்களையுடையவன் என்று அர்த்தம் அல்லது அக்ஞான நித்திரையை வென்றவன்.) हृषीकेश: இந்திரியங்களுக்கு ஈசனான ஸ்ரீ கிருஷ்ணபகவான் एवम् இந்தமாதிரி उक्त: சொல்லப்பட்டவராய் रथोत्तमम् சிரேஷ்டமான ரதத்தை (ரதத்தில் ஸவாரிசெய்கிறவன், ஸாரதி, ரதம், த்வஜம் இவர்களுடைய மாஹாத்மியத்தால் ரதத்திற்குச் சிறப்பு.) उभयोः सेनयोः இரண்டு ஸேனைகளுக்கும் मध्ये நடுவில் स्थापयित्वा நிறுத்தி भीष्मद्रोणप्रमुखतः பீஷ்மர், துரோணர் இவர்கள்முதலான सर्वेषाम् ஸமஸ்தமான महीक्षिताम् அரசர்களும் கேட்டுக்கொண்டிருக்க पार्थ அர்ஜுன समवेतान् யுத்தத்திற்காக ஒன்றுசேர்ந்திருக்கிற एतान् இந்த कुरून् கௌரவர்களை पश्य பார் इति என்று उवाच சொன்னார்.

(இன்னும் வரும்.)

K. N. ராமஸ்வாமிசர்மா,
வித்யாவிநோத.





॥ श्रीः ॥

## மைமின்ஸிங் ஹிந்து ஹிதஸாதினி ஸமிதியில்,
# ஸ்ரீ தர்பங்கா மஹாராஜா அவர்களின் பிரஸங்கம்.

(முன்தொடர்ச்சி)




நாஸ்திகத்துவமானது இதுவரையிலும் சொல்லிவந்த விஷயத்திற்கு அனேகமாயாக்ஷேபணை இராது. எல்லாரும் வியாதிக்கு இது தான் காரணமென்றுமதற்கிது தான் மருந்தென்றும் ஒப்புக்கொள்வார்கள். ஆனால், அனுபோகத்தில் இந்த மருந்தை எப்படி யுபயோகிப்பது என்று யோசிக்கும்போது அப்பொழுது தான் கஷ்டங்கள் உடனே உண்டாகின்றன. நாம் நிஷ்கர்ஷிக்கவேண்டிய கேள்விகள் எல்லாவற்றிலும் முக்கிய கேள்வி எதுவென்றால் இக்காலத்தில் நாம் எப்படி முற்காலத்து அனுஷ்டானங்களை யனுஷ்டிப்பது என்பது தான் அதன் உத்தரம் எனக்குத் தோன்றுகிறவரையில் பின்னர் சொல்லப்படும் ஒருமார்க்கத்தை நாம் அனுஷ்டிப்பதாகும். முதல்முதல் நாம், யஜனம், அத்யயனம், பிரதி

க்கிருஹம் என்ற ஆத்மீயமான தொழில்களைக் கைக்கொள்ளவேண்டும். அதிலும் கடைசியான பிரதிக்கிருஹத்தை முதலில் அனுஷ்டிக்கத்தக்கது. அதாவது, நாம் பிரதிக்கிருஹத்தை யதாவது அதற்கு இக்காலத்தில் பிரதிநிதித்வமாயுள்ளதையாவது நாம் முதலில் அனுஷ்டிக்கவேண்டும். முற்காலத்தில் பிராம்மணர்களுக்கு எவை அபேக்ஷையோயவைகளெல்லாம் பிரதிக்கிருஹமூலமாய்க் கிடைத்தன. அவைகளால் தங்களை ரக்ஷித்துக்கொண்டதுமன்றிப் பரோபகாரமான தான தருமங்களையும் நடத்தி வந்தார்கள். சரீரயாத்திரைக்கு வேண்டிய ஸாதனங்களை சம்பாதிக்கவேண்டியவொரு கவலையானது அவர்களுக்கில்லாமலிருந்ததால் மற்ற ஐந்து தொழில்களையுமவர்கள் சிரத்தையோடு செய்யமுடிந்தது இக்காரியம் இந்நாளில் சாத்தியமல்ல. தேசத்தினுடைய வளத்தின் நிலைமையும் ஜனங்களுடைய ஜீவனோபாயவகையுமாசாரமும் முற்றிலும் இக்காலத்துக்கேற்றபடி மாற்றப்பட்டாலொழிய பிராமணர்கள் தங்கள்தொழில்களை யனுஷ்டிப்பது முன்போல் ஸாத்த்தியமல்ல இப்போது நம் ஜனஸமூஹத்திலியங்குகின்ற மனோபாவம் தர்மபாவம் ஜீவனோபாயநிலைமை ஆத்மக்ஞான லக்ஷணம் இவைகளுடைய நிலைமையில் பிராம்மணர் பிரதிக்கிருஹத்தால் தன் வயிறுவளர்ப்பதே அஸாத்தியமாகும் பரோபகாரதர்மத்துக்கு எங்கிருந்து பொருள் கிடைக்கும்? பிரதிக்கிருஹமாக ஸ்வீகரிக்கும் பொருள்களைக் கொடுக்கக் கூடியவர்கள், அதாவது தனமுள்ளவர்கள் இந்தக் காரியங்களுக்குத் தங்கள் பணத்தைக் கொடுக்கச் சம்மதமில்லாதவர்களாயிருக்கிறார்கள். ஏனென்றால் அவர்களுக்கு ஆத்மோன்னதிக்குக் காரணமான தர்மத்தில் சிரத்தையில்லை. அது எப்படியிருந்தாலும் பிராம்மணனுனவன் எதையனுஷ்டித்து எதன் ரூபமாக விளங்கவேண்டுமோ அப்பேர்ப்பட்ட மனோபாவங்களிலும் நோக்கங்களிலும்



அவர்களுக்கு அதிகச் சிரத்தையில்லையென்பது நிச்சயம். இதற்கும் வெகுவாய் பிராம்மணனே குற்றவாளியாகிறான். ஏனென்றால் படிப்பு ஆசாரம் ஆத்மவிசாரம் முதலான காரியங்களில் ஆதி உத்தேசப்படிக்கும், அபேக்ஷைப்படிக்கும், அவன் சரியாய் நடந்துவந்திருப்பானேயானால், மற்ற ஜாதியாரிடத்திலிருந்து தனக்குரித்தான மரியாதையையவன் அடையாமலிருந்திருக்கமாட்டான். அவர்களும், பிராமணனால் அனுஷ்டிக்கப்பட்டுவந்த தர்மத்தில், சிரத்தையில்லாமற் போயிருக்கமாட்டார்களென்பது திண்ணம். ஆகையால் உண்மையான பிராம்மணன் முன்னர் தனக்குரித்தான மரியாதையை மீண்டும் அடையுவண்ணம் தன் முன்னோர்கள் கைப்பற்றிவந்த ஆத்மவித்யை தர்மம் முதலானதுகளை மீண்டும் அடைய முயற்சி செய்யவேண்டும். பணக்காரர்களும் படித்தவர்களும் இக்காலத்தில் பிராமணர்களை ரக்ஷிக்க வெகுவாய் விருப்பமில்லாமலிருக்க, ஏனையோர்களிற் பெரும்பாலோர் பிராமணர்களுக்கு தானங்கொடுக்க சக்தியற்றவர்களாயும் தர்மந்தெரியாதவர்களாயு மிருக்கிறார்கள். ஆகையால் இக்காலத்தில் ப்ரதிக்ரஹம் கிடைப்பதரிதால், தனக்கும் ஜனங்களுக்குமுற்ற ஜீவனோபாயத்தை முதலில் பிராமணன் கடைப்பிடிக்கவேணும். பிறகு தான் தன்னுடைய மற்றக்கடமைகளை நிறைவேற்ற அவனுக்கு சாத்யமாகும். பொருளின்றி ஒன்றும் சாதிப்பது அரிதாகையால், தன்னுடைய ஜீவனத்திற்கும், கர்மானுஷ்டானத்துக்கும் போதுமான ப்ரதிக்ரஹத்துக்கும் பதிலான வேறு சரியான ப்ரதிநிதிசாதனம் எது என்று அவன் யோஜிக்கவேண்டும். இப்படி அவன் யோசனை செய்வானேயானால், அது பிசகுமல்ல, ஆச்சரியமுமல்ல. ப்ராசீனமான ப்ரதிக்ரஹதர்மத்தைவிட்டு, வேறு தொழிலில் பொருள் சம்பாதிப்பானே

யானல், அதுவும், ஆபத்கால அநுஷ்டேயமான தர்மத்தை அவன் பற்றியதாகும் அது சாஸ்திரஸம்மதமேயாகும் ஆகவே, இக்காலத்தில் ப்ரதிக்ரஹம் போதுமான ஆதாரமாயிராததால், தானும், தேகத்திலும் மனத்திலும் வலிமை குன்றிய பல ஜனங்களும், ஆத்மோந்நதிக்கு ஹேதுவான காரியங்களைப் பற்றி நினைக்கவாவது சக்தியுள்ளவர்களாக ஆவதற்கு எவ்விதம் பொருள் சம்பாதிக்கத் தக்கது என்று நிதானிக்கவேண்டும். அதாவது இக்காலத்திற்கு ஏற்றபடி, ஒரு தேசத்தாருக்கு செல்வத்தை கிரமமான மார்க்கத்தில் ஆக்குவதும், பலத்தை கட்டாயம் கொடுக்கக்கூடிய நவீனமார்க்கமான கைத்தொழில், வியாபாரம், வியவசாயம் முதலியவைகளை ஒழுங்குபடுத்தி ஆசரிப்பதில் பிராமணன் முயலவேண்டும் இதை பிராமணன் முதல்முதலில் கைக்கொண்டு சாதிக்காவிட்டால், மற்றை தர்மங்களைப் பற்றிப் பேசுவதும் வீணுகும் ஏனென்றல், ஏழைமைத் தன்மை நிவர்த்தியாகாதவரையில், ஜனங்கள் மிடி நீங்காதவரையில் பிராம்மணர்களில் அநேகரும் மற்ற ஜனங்களும் வேறு எந்தக்காரியத்தையும் செய்ய நேரமாவது நினைவாவது அவர்களுக்கு இருக்கமாட்டாது. மேலும் இந்த ஏழைமைத்தன்மை நீங்கும் வண்ணம் கைத்தொழில் வியாபாரம் வ்யவசாயம் ஒழுங்குப்படுமாகில் பிராம்மணர்கள் தேசத்தின் பொருளாதாரக்கிளர்ச்சி விஷயங்களில் மற்ற வகுப்பாரை வழிகாட்டவும் கூடும்.

ஏனென்றல் இந்தியாவில் ஆதிகாலத்திலும் ப்ராமணோத்தமர்களான ரிஷிகளும் யோகிகளுமே ஜாத்ய நாகரீகபூதமான பராபரவித்யையை விளக்கியதோடு மனிதர்களுக்கு பற்பல கலைகளையும் கைத்தொழில்களையும் வ்யாபாரங்களையும் சாஸ்திர ப்ரவிர்த்தியையும் கற்பித்தவராகும். ஹிந்துஜன கோஷ்டியும் நாகரீகமும் அநேகமாய்ப் புதிப்



பித்துக்கட்டவேண்டிய இக்காலத்திலும் ஆத்மவித்யையிலும் இதரப்படிப்பிலும் எப்படியோ, அப்படியே கலைகளிலும் கைத்தொழில்களிலும் நவீனமார்க்கத்தை அநுஷ்டித்துக்காட்ட பிராமணர்களே முன்வரவேண்டும். உண்மையில் அப்படி அவன் செய்யாமற்போனல் தன் தர்மத்தைக் கைவிட்டவனுகும்.

ஆனல் இத்தகை கிருஹஸ்த தர்மத்தைச் செய்யும் போது அவன் தனது ஆத்மலாப ஒழுக்கத்தையும் அதற்கு ஏற்பட்ட கர்மாக்களையும் மறக்கலாகாது. தேசத்தின் செல்வப்பெருக்கம் ஆக்க முயலுதலிலேயே இக்கடமைகளை அநாதரவு செய்யாது உடன் நடத்தவேண்டும். இரண்டு கடமைகளையும் ஏககாலத்தில் கூடியவரையில்செய்து தீரவேண்டும் அப்படிச்செய்தால் ஈட்டும் பொருளானது மற்ற தர்மங்களை சரிவர நடத்துவதற்குத்தான் என்றுவது ஞாபகமூட்டக்கூடும்.

மேலும் நமது நாகரீகத்தையும் ஆத்மோந்நதியையும் காப்பாற்றவேண்டுமானலும், இக்காலத்தில் பொருளே அதற்கு ஆதாரமாயிருக்கிறது. பொருளில்லாமல் தான் நமது முயற்சிகள் பயன்பெறுது நமது தரித்திரம் நம்மை தலைக்கிளப்பவொட்டாமல் அமுக்குகிறது. அதை நிவர்த்திக்க ஹிந்துக்கள் மேம்பாடடைந்த ஆதிக்காலத்திற்போலவே நம சிறுவர்களிற் பெரும்பாலார்க்கும் எல்லாவிஷயங்களிலும் லகுவான படிப்புப்புகட்டிய பிறகு ஏதாவது ஒரு கலையிலோ தொழிலிலோ இக்காலத்திற்கேற்றபடி சேவகாவிர்த்திக்குப் போகாமல் சிறப்பான ஒரு படிப்பை அவர்களுக்குச் சொல்லிவைக்கவேண்டியதவசியம் அப்படி தொழிற் படிப்பு சாதிக்கப்பட்டால் உலகத்தில் மற்ற தேசத்தாரோடு நேரிடும் போட்டியில் அவர்கள் தலைதூக்கி ஜயிக்கக்கூடும்.

சிறுவர் அநேகருக்கும் இந்த மாதிரி கைத்தொழில் முதலிய பல ஜ்ஞானம் பயிற்றல் அவசியமாயிருப்பினும் காவ்யம் சாஸ்திரம் வேதம் வேதாங்கம் முதலியவைகள் அவைகளைக்கற்கத் தகுந்த யோக்கியதை யுள்ளவர்களும், அவைகளில் நன்றாய் உழைக்கக்கூடியவர்களும், அதைக் கொண்டு பின்னர், உபாத்தியாயர்களாகவும், புரோகிதர்களாகவும், சாஸ்திரஜ்ஞர்களாகவும் ஆகி காலக்ஷேபம் செய்யக்கூடிய சிலருக்கே, அவைகள் கற்பிக்கப்படவேண்டும். ஆதிகாலத்தில் நமது தேசத்தில் பொருக்கி எடுத்த சிலருக்கு இந்த படிப்பு சொல்லிவைக்கப்பட்டது. அப்படி செய்ததுபொறாமை என்று நமது பிரதிவாதிகள் தெரியாமல் சொல்லுகிறார்களே தவிர அதன் உண்மையான அறிவையும், அது தாபத்தையும் அறிந்திலர். இக்காலத்தில் யூனிவர்ஸிடி என்று பெயர்கொண்ட சர்வ கலாசாலைகளும், எல்லாருக்கும், இந்த காவ்யசாஸ்திரப் பாடங்களைக் கற்பிக்க ஆரம்பித்து யோக்யதையொன்றும் பெறாமலும், பிழைப்புக்கு வழியில்லாமலும் ஆயிரக்கணக்கான வாலிபர்கள் வீணே வாழ்நாள் கழிக்கிறார்கள். நமது ஆசார்யர்கள் ஆதிக்காலத்தில் இப்படி வீண் படிப்பு முறையை யூனிவர்ஸிட்டியரைப்போல் அநுஷ்டித்ததில்லை.

(இன்னும் வரும்).





# ஹிந்துமதஜாதியும் சீர்திருத்தமும்.



இந்திய புண்ணிய பூமியில் வாழும் பலகோடி ஹிந்து ஸநாதனதர்மிகளில் ஒருவனாகிய அடியேன் கனம் ஜஸ்டிஸ் சேஷகிரி அய்யர் அவர்கள் ஹிந்து ஜனஸமூக அமைப்பின் எதிர் கால நிலைமையைப் பற்றிச்செய்த உபந்யாஸத்தைப் படித்துப்பார்க்க என்மனதில் ஏதோ ஸங்கடமுண்டாகி ஹைகோர்ட்டு பாரிஸ்டர் மிஸ் அர்வாச்சி அம்மாளுக்கும் முதல் கிரேட் ப்ளீடர் மிஸ் தர்மி அம்மாளுக்கும் நடந்த சம்பாஷணை மூலமாய் என் மனக்கொள்கைகளை வெளிப் படுத்திக் கொள்ளுகிறேன்.

அர்வாச்சி அம்மாள்:—ஏ பியூன்! இந்த விஸிடிங் கார்டனுப்பிய மிஸ் தர்மி அம்மாளை உள்ளே அழைத்துவா.— வாருங்கோ தர்மி அம்மா. உட்காருங்கோ. ஏது உங்கள் வரவு அருமையாயிருக்கின்றது. எனக்கு விஸிடிங்கார்டு என்னத்திற்கு நம்மளுடைய பால்ய ஸ்நேகத்தை நினைத்துக்கொண்டு தடதடவென்று உள்ளே வருகிறதுதானே.

தர்மி அம்மாள்:—அப்படியாகுமா! உங்களுடைய அந்தஸ்திற்கும் படிப்பிற்கும் நான் எந்த மூலே. நமக்கு ஸ்நேகமென்ன வந்தது. நானில்லாதசமயத்தில் என் பேரை நீங்கள் வலுவிலிழுத்து நிஷ்காரணமாய் என்னைத் தூஷித்தீர்களாமே. இது விஷயமாய் நான் கச்சேரிக்குப் போகிறதற்கு முந்தியே உங்களை ஒரு வார்த்தை நேரில் கேட்கலாமென்றல்லவோ வந்தேன்.

அர்வாச்சி அம்மாள்:—தர்மி அம்மா இதென்ன அபாண்டமாயிருக்கிறது. உம்மைப் பற்றி நான் பேசவேயில்லையே. உமக்கு ஆர் சொன்னு?

தர்மி அம்மாள்:—உங்களுக்கும் எனக்கும் நேராய் ஒன்றும் நடக்கவில்லே. என் கக்ஷிக்காரர் செய்ததை நான் செய்தேனென்றும் உங்களுடைய கக்ஷிக்காரர் சொன்னதை நீங்கள் சொன்னதாயும் நமக்குக் கோர்ட்டிலே பேசிப் பேசி வந்த கெட்டபழக்கத்தினலே நீங்கள் என்னை நேரே தூஷித்ததாய் என் வாய்தவரி வந்துவிட்டது மன்னிக்கவேணும். நான் ஸநாதன தர்ம ஸைட் வைக்கீலாயிருந்துவருகிறேன். நீங்கள் எதிர் கக்ஷிக்காரர் சொந்த லாயரென்பதைக் கேழ்விப்பட்டுத் தான உங்களைக் கேட்கவந்தேன். நான் 6-11-19-இல் Y. M. C. A. அஸ்ஸோஸியேஷனுக்கு வரவில்லே. என் சொந்த டியூடியாய்த் திருச்சினுப்பள்ளியிலிருந்தேன். நீங்கள் தான் நடந்த விபரத்தைச் சொல்லுங்களேன். பேபரிலே வாசிக்கத் தான் எனக்குத் தெரிந்தது.

அர்வாச்சி அம்மாள்:—அப்படிச் சொல்லும். உமக்குத் தான் பேபர் மூலமாய் எல்லாம் தெரியும்போலிருக்கிறதே. ஆகிலும் எனக்குத் தெரிந்தமட்டிலே நினைத்துப் பார்த்து நடந்ததைச் சொல்லிக்கொண்டு



வருகிறேன். நீர் கேட்டு ஏதாவது பதிற் சொல்ல இஷ்டப்பட்டாலும் சொல்லுமே. நமக்குள்ளே ஏன் வீண் மனஸ்தாபம்?

தர்மி அம்மாள்:—ஆகா, அது சரி. நீங்கள் மாத்திரம் நடந்தது நடந்தபடிச் சுருக்கி சொல்லுங்கள். நானும் ஹிந்துப் பேபரை ஒருவாறு படித்துவிட்டுத்தான் வந்திருக்கிறேன்—சொல்லுங்கோ—

அர்வாச்சி அம்மாள்:—(A) ஆரியர்கள் இந்தியாதேசத்தில் குடியேறின பூர்வகாலத்தில் ருக்வேதத்தில் வரையப்பட்டிருந்த தர்மங்களும் நமக்குள் ஸ்வதந்திரமும் ஜனஸமூகப் பொருப்பும் முதலியவற்றின் விதிகளும் நாளடைவில் ஒருவாராக மாறிப் போயிருக்கின்றனவென்றும், அரண்யத்தில் தபஸ் பண்ணிக்கொண்டிருந்தகாலத்தில் நமக்கு உபநிஷத்துக்கள் வெளிவந்தனவென்றும், அவைகள் க்ஷத்திரிய கிரஹஸ்த தர்மங்களைக் காண்பித்திருக்கின்றனவென்றும், புராணங்கள் ராஜாங்க யுத்தசட்ட விவாஹாதிகளைப் பற்றி ஊர்ப்பட்டனவைகளை நாளடைவில் சேர்த்துக்கொண்டனவென்றும், இதுபோலவே பல புத்தி தீக்ஷண்யர்களால் தாராளமான மனதோடு நம்முடைய தத்துவ சாஸ்திரம் ஒழுங்கு படுத்தப்பட்டதென்றும், ஸ்மிருதிகளென்ற பேரோடுகூடினதாய் மனிதவாழ்க்கையின் விதிகள் ஆதியில் சட்டமாய் ஜோடிக்கப்பட்டனவென்றும் நியோக அப்பியாஸ விவாஹ ஸ்வீகார வகையரு கோட்பாடுகள் மனுதர்ம சூத்திரங்களில் எத்தனையோ எடுத்துச் சொல்லப்பட்டிருந்தாலும் அவைகள் இக்காலத்தில் முன்னேற்றம் கருதும் தற்கணிசம் குறியாகக்கொண்ட ஜனஸமூகத்தோர்க

ளுக்கு மனம் பிடியாமலிருக்கின்றனவென்றும், வித
வா விவாஹத்தைப் பற்றிக் கூட பராசரருஷி செல்லு
மென்று நிர்த்தாரணம் செய்திருப்பதாய் அபிப்பிரா
யம் கொண்டவர்கள் பலர் இருக்கிறார்களென்றும்,
அனேகமாய் எல்லா ஸ்மிருதிகளாலும் வியாக்கியான
கர்த்தாக்களாலும் வைத்திநாததீக்ஷிதர்வாள் முதலிய
மஹான்களாலும் சிஷ்டாசாரமானது கீழ்ப்படிய
வேண்டிய பிரமாணமெனச் சிபார்சு செய்யப்பட்டி
ருக்கிறதென்றும் ஆகிலும் அதை வலுத்துப் பேசா
மல் அவர்கள் வழவழப்பாய் விட்டுவிட்டு மனுவிற்
குப் ப்ராதான்யம் கொடுத்ததினாற்றான் இப்போதை
யச் சீர்கேடுகளெல்லாம் ஆரம்பமாகி ஆயிரம் மடங்
காய்ப் பெருகிவிட்டனவென்றும், விஜ்ஞானேசுவரர்
முதலியவர்கள் காலத்துக்குத் தக்கபடி ஆசாரங்களை
மாற்ற நரம்பும் வீரியமும் தைரியமும் இல்லாமற்போ
னதினாலும் அவர்களுடைய நாணயப்பிசகான செய்
கையாலும் இப்போது நாம் கடந்து கஷ்டப்படவேண்
டியிருக்கின்றதென்றும், வித்யாரண்யரால் மாதவ்ய
மென்ற கிரந்தத்திலும் வேறு இரண்டு கர்த்தாக்க
ளால் ரத்நாகரம் சந்திரிகா வென்ற கிரந்தங்களிலும்
சுருதிஸ்மிருதிகளை ஆதாரமாய்க்கொண்டு ஆசாரவிதி
கள் ஒருவிதமாய் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றனவென்
றும், சிஷ்டாள் கோஷ்டியில் நாம் சேர்த்துக்கொள்
ளப்படமாட்டோமானாலும் நாம் கூட கோடிஜனசமூ
கத்தில் ஒன்றல்லவாவென்றும், அன்ய வகுப்பாரோடு
கொள்வனை கொடுப்பனை விவாஹாதிகள் செய்யும்
விஷயத்தில் நாம் நம்மைச் சீர்திருத்திக்கொள்ளாத
பக்ஷத்தில் நம்முடைய ஸ்திரீகளுக்குச் சூடிக்கான
கழுக்கு முழுக்கின்னு குழந்தைகள் பிறக்காதென்
றும், இவைகளுக்கெல்லாம் தடஸ்தமாய் நிற்கும்



ஜாதி யேற்பாடுமுந்தி ஒழியவேண்டுமென்றும் சொல்
லப்பட்டதுண்டு. நீங்கள் ஏதாவது பதில்வாதம்
சொல்ல விரும்புகிறீர்களா ?

தர்மி அம்மாள்:—கொஞ்சம் கூடத் தயங்காமல் தான்
சொல்வதே சரியென்று வீம்பு பேசுவோருடன்
வாதம் செய்வதிலும் அல்லது வேறுவிதத்தில் விளக்
கிக் காட்டுவதிலும் பிரயோஜனமில்லை இதுவுமன்றி
யில் மதவிஷயமான விவாதத்தில் இருதிறத்தாராலும்
ஒப்புக்கொள்ளச் சம்மதமான பிரமாணங்கள் இன்
னின்னவை யென்பது முந்தித் தீர்மானஞ்செய்து
கொள்ளப்படவேண்டும். அதி முக்கியமான பிரமா
ணங்களை யெல்லாம் கடிப்பிரதேசத்தைப் பிடித்துத்
தள்ளிவிட்டால் அப்பேர்ப் பட்டவர்களோடு எப்படி
வாதம் செய்வது ? சிஷ்டாசாரங்களை விதிக்க அரு
கர்கள் எப்படிப் பட்டவர்களாயிருக்கவேண்டுமென்
றும், அப்படிப்பட்ட யோக்கியதைகள் இல்லாத பதி
னாயிரம் பேர்கள் கூடி ஒரு விதியைச்சொன்னாலும்
அது அங்கீகரிக்கத் தக்கதில்லை யென்றும், சிஷ்
டன் என்போன் பிராமணஜாதியில் பிறந்திருந்தால்
மாத்திரம் போராதென்றும், பிர்ம்ஹசரியவிரதத்தை
அனுஷ்டித்து நடந்து ஸ்மிருதிகளுக்கு விரோத மில்
லாத நியாயசாஸ்திரமறிந்தவனும் மீமாம்ஸா ரூப
மான தற்கசாஸ்திரமறிந்தவனும் நிருக்தமென்னும்
வேதாங்கமறிந்தவனும் மனுஸ்மிருதி முதலிய தர்ம
சாஸ்திரவல்லவனும் இதைப்போலுள்ளவர்கள் அனே
கர் பரிஷத்துக்கூடிச்செய்த ஆசார நிர்ணயம் மட்
டும் ஒப்புக்கொள்ளப் படுமென்றும், மனுதர்மசாஸ்தி
ரத்தின் 12வது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருப்
பது தெரிந்தேயிருக்கும். அப்படியிருந்தும் உங்க

ளுடைய அடியிற்கண்ட கொள்கைகள் ஹிந்து பேப்பர் மூலமாய் வெளிவந்திருக்கின்றன. என்னவெனில்,—எனக்கு பகவத்கீதையிலும் ஸ்ரீசங்கரருடைய வாக்கியத்தின்பேரிலும் அதிகபக்தியுண்டு. ஆனாலும் ஜாதியைப் பிடிவாதமாய் அனுசரிக்கத் தான் வேண்டுமென்று அவைகளில் கட்டளையிட்டிருப்பதாய்த்தெரியவரவில்லையென்றும் அவைகளில் ஜாதிவிஷயமாய் ஏதாவது கட்டளையிட்டிருந்தாலும் கூட அவர்கள் ஏற்படுத்தின ஆதிவிதிகளின் பிரகாரமே இருபதாம் நூற்றாண்டின் கடைசியிலுள்ள நாம் அந்தப்படி நடந்துகொள்ளவேண்டுமென்று அவர்கள் எண்ணியிருந்திருக்கமாட்டார்களென்று நான் வணக்கத்தோடு சொல்லுகிறேன் என்றும், ஒருவேளை ஜாதிபேற்பாட்டிற்கு ஒருவர் சுருதிஸ்மிருதிகளை ஆதாரமாக எடுத்துக் காட்டினாலுங்கூட அவைகளை அனுசரித்து நடந்துகொள்ள நான் மரியாதையோடு மறுக்கிறேனென்றும், ஜாதி ஏற்பாட்டிற்கு ஸாமாஜிக சாஸ்திரம் கைத்தொழில் சாஸ்த்திரம் ராஜரீக மனோபாவங்கள் அல்லது மதசம்பந்தமான கோட்பாடுகள் அஸ்திவாரமாக இருந்தாலும் கூட அவைகளை உள் நுழைந்து விசாரிக்க எனக்கு நிமித்தமில்லையென்றும், ஜாதி ஏற்பாட்டினால் இதுவரையில் ஏதோ உபயோகமிருந்திருக்கலாமானாலும் இனிமேல் அதைச் சகிக்கமுடியாதாகையால் அது தொலைந்துபோகவேண்டியதுதானென்றும், ஸமுத்திர யாத்திரை விஷயத்தில் ஸ்மிருதி கிரந்தங்களில் என்ன சொல்லியிருக்கிறதென்று விசாரித்துப் பார்ப்பதையே ஒழித்துவிடவேண்டுமென்றும் புராதனகாலத்தில் எழுதப்பட்ட ஸ்மிருதி கிரந்தங்களையும் மனுவையும் திரும்பிப் பார்க்கக்கூட நமக்கு அவச்யமில்லையென்றும் இக்காலத்திய வாழ்க்கையின்



விதிகளை ஒழுங்கு படுத்தப் பூர்வத்திலிருந்த பழைய முன்னோர்களுக்குப் பாத்தியமில்லையென்றும் இப்படிக்கெல்லாம சாஸ்திர திரஸ்காரம் செய்துவிட்டவர்களோடு வாதிப்பதில் என்ன பிரயோஜனம். வேறே பாயிண்ட்கள் பேசப்பட்டிருந்தால் சொல்லுங்கள் கேட்போம்.

அர்வாச்சி அம்மாள்:—ஜனங்களுடைய வாக்கே தெய்வவாக்கென்ற பழமொழிக்கிணங்க நாம் ஜனங்களுக்கு அடங்கி நடந்துகொள்ளவேண்டும் என்றும், கொஞ்சம்பேர் சேர்ந்து வெகுபேர்களுக்கு புத்தியுரைக்கும் காலம் போய்விட்டதென்றும் சில பிரபுக்கள் கூடியே சட்டம் செய்யும்காலம் போய்விட்டதென்றும் கொஞ்சம்பேர் சேர்ந்து சட்டம் செய்யவும் அதிகாரம் செய்யவும் பாத்தியதையைக் கொண்டாடுங்காலமானது மலையேறிப் போச்சுதென்றும் சட்டங்கள் எப்படியோ அப்படிப் போலவே அனுஷ்டானங்களும் ஆசாரங்களும் ஜனசமூகத்தினுடைய பெரும்பாலோர்களால் அனுசரிக்கப் படவேண்டியிருப்பதால், நமக்கு வேண்டிய சட்டங்கள் அவர்களுடைய ஆலோசனையிலிருந்து வெளிக்கிளம்பவேண்டுமென்பதுவே நியாயமென்றும், அப்படிச் செய்யாமல் கொஞ்சம் பேர் ஆலோஜனைப்படி வெகுபேர்களுக்கு ஒரு நிபந்தனை செய்யப் பட்டால் அது பிரமாத கலகத்திற்கு ஆஸ்பதமாய் முடியுமென்றும இப்படிக்கெல்லாம் சொல்லப்பட்டதுண்டு.

தர்மி அம்மாள்:—ஹிந்துதேசத்தில் ஆதியில் ஆக்ஷியானதிங்கும் அறைகுறையும் ஊழலுமான சூழ்ச்சிகளோடு சேர்ந்த சந்தடிக்காரக் கூட்டத்திலிருந்து கிளம்பி மேலே ஏறிவரவில்லை. ஆனால் அது உலகத்

திலுள்ள சக்கிரவர்த்திகளின்பேரில் கம்பீரமாயும் அமைதியாயும் தர்மஞ்ஞானமுள்ளவர்களிடமிருந்து கீழே இறங்கிற்று. தனித்வநலத்தையும் பரிக்ஷார்த்தத்தையுமே கைக்கொண்ட ஐரோப்பாதேசமானது இந்தியாவிற்கூறிய அன்பிற்கும் ஸ்வயநலமறுப்பிற்கும் பதிலாய் இஷ்டத்தினால் ஆய்ந்தெடுக்கப்பட்டதான போராட்டத்தையும் வலுத்தவன் தப்பிப்பிழைக்கும் கொள்கையையும் ஒட்டின சட்டங்களை ஆராதித்துவருகின்றது. அடிக்கடி மாறிக் கொண்டிருக்கும் சந்தர்ப்பங்களுக்குத் தக்கபடியுள்ள மேற்கொண்ட சட்டங்கள் கொலையாலும் ரத்தப் பெருக்குச் சேர்ந்த யுத்தங்கள் மூலமாயும் அல்லது அவைகளால் பயமுறுத்தப்படும் அபாய ஆஸ்பதங்களுக்கு உள்ளாகிக்கொண்டும் இயற்றிவரப்படுகின்றன. அப்படிப்பட்ட சட்டங்கள் நிச்சயமில்லாத மூலத்திலிருந்து வந்ததினாலும் அவைகள் கொஞ்சம் பேர் சேர்ந்த பிரபுக்களுடைய அரசாக்ஷியை விரும்புகிறவர்களுக்கோ அல்லது கூக்குரல்போடும் கீழுள்ள தொழிலாள்க்களுக்கோ ஓரபக்ஷபாதமாய் எப்போதும் நேருவதாயிருப்பதாலும் எந்த நிமிஷத்திலோ அவைகள் திடீரென்று மாற்றப்பட ஆஸ்பதமானவைகளாயிருக்கின்றன. ஹிந்துதேசத்தின ஆரியஸதாசார அமைப்பிலோவென்றால் கொஞ்சமேனும தோஷமற்ற பரிபாலனமுறையாகிய தெய்விகமான ஏகாதிபத்யமானது பிரகடனஞ்செய்யப் பட்டுவந்தது. அதின் வரையரையானது மேற்கு நாட்டின் ஏகாதிபத்யத்தின் வரையறையைப்போல் சந்தடிக்கூட்டக்காரர்களிடத்திலிருந்தாவது ஸங்கங்களை அனுவச்யமாய் ஆட்டிவைக்கும் நிச்சயமில்லாத அறிவையும்



கக்ஷிப் பிரதிகக்ஷி செய்யும் மனப்போக்கையுமுடைய மனிதர்களிடத்திலிருந்தாவது வரவில்லை. ஆனால் அந்த ராஜாங்க வரையறுப்பானது எங்கிருந்து வந்ததென்றால் அது கபடமில்லாதிருந்தாலும் சக்தியை வஹித்தவர்களாயும் அரண்யத்தில் வஸித்தவர்களாயிருந்தபோதிலும் கிரஹஸ்த லௌகிகவிஷயங்களில் பரிபூர்ண நிபுணர்களாயும் உள்ள பயபக்தி காம்பீரியம் நிறைந்த ஸயண்டிஸ்டுகளும் ஸத்தியத்தைச் சூக்ஷ்ம புத்தியாலறியும் சக்தர்களும் இச்சையை அடக்க வல்ல ஆரியருஷிகளும் சேர்ந்தகூட்டத்தார்களிடத்திலிருந்து (அந்தவரையருப்பானது) வந்துகொண்டிருந்தது. இப்போது நவீன நாகரீகப் பிரகாரம் மெஜாரிடி அதாவது ஜனஸமூகத்தினர்களுடைய பெரும்பாலோர்களால்தான் நம்முடைய சட்டங்கள் இயற்றப்படவேண்டுமென்று தங்களுடைய அபிப்பிராயப்படியே வைத்துக் கொண்டாலும் கூட மேலே (B) பாராவில் சொல்லப்பட்ட தங்களுடைய ஸ்டேட்மெண்டில் கூசாமல் நான் கையெழுத்துப்போடுவேன் ஏனென்றால் அவைகளெல்லாம் என் கக்ஷிவாதமேயாகும். ஆனால் ஒரு சங்கதிமட்டும் நிச்சயமாக வேண்டியிருக்கின்றது. என்னவெனில்—

(1) கொஞ்சஜனக்கக்ஷி உங்களுதா என்னுதா?

(2) புத்தியுறைக்கும் கொஞ்சம் பேர் பிரபுக்கள் கக்ஷி உங்களுதா என்னுதா?

(3) கொஞ்சம் பேர் சட்டம் செய்ய எத்தனப்படுவதும் அதிகாரபாத்தியம் பாராட்டுவதுமான கக்ஷி உங்களுதா என்னுதா?

(4) ஆசார அனுஷ்டானங்களை அனுசரிக்கவேண்டியிருப்பதும் ஆலோசனை கேட்கப்படவேண்டியிருப்பது

மான ஜனஸமூகக் கக்ஷி உங்களுதா என்னுதா?

(5) என் கக்ஷிஜனங்களை அவசரப்படுத்தித் திருத்தத்தினால் கெடுத்தால் ஜனங்களுக்குள் பெரிய கலகமுண்டாகுமா? அல்லது மற்றத் தேசத்தார்களுடைய நவீன நாகரீகத்தின் பயனும் சுகானுபவ கதியும் பரிக்ஷித்து அனுக்கும் வரையில் ஜாதியை ஒழிக்கும் சீர்திருத்தங்களை நீங்கள் நிறுத்தி வைத்திருந்தால் மோசம் வருமா? மேற்கண்ட 5 பாயிண்டுகளிலும் கண்டிருக்கும் ஜனஸமூக மெஜாரிடி மைனாரிடி யார் யார் பக்கமென்று ருஜுச் செய்யும் விஷயத்தில் அடியிற் கண்ட ஜனசங்கியை விபரத் தொகுதிக்கணக்கை கீழே குறிக்கின்றேன். ஆகிலும் நீங்கள் இந்தியாவின் இத்தென்பாகத்தில் மாத்திரம் நிகரற்ற அபகீர்த்தியைச் சம்பாதித்திருக்கும் ஜாதி ஏற்பாட்டினுடைய செல்வாக்குகளுக்கெட்டாமல் எல்லாஜாதிச் சிறுவர்களும் கிளம்பி மேல் எழவேண்டுமென்று சொல்லியிருப்பதினாலும் இந்தியாவின் இத்தென் பாகத்தில் மாத்திரம் கிளம்பியிருக்கும் ராஜீய (பிராமணர் பிராமணரல்லாதாருடைய) வாதக்கிளர்ச்சிக்கு வர்ணாச்ரமதர்மிகளே முக்கிய ஜவாப்தாரிகளென்றும் உபந்யாஸத்தின் பின்பாகத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதாலும் ஜாதி வித்யாசத்தைப் பற்றி நான் ஒரு வகுப்பார் பேரில் மாத்திரம் குறிப்பிட்டுக் குற்றம் சுமத்தவில்லையென்றும் ஏனென்றால பிராமணர்களில் எவ்வளவு உட்பிரிவுகள் இருக்கின்றனவோ அவ்வளவு உள் வகுப்புக்கள் பிராமணரல்லாதார்களிலும் இருக்கின்றனவென்றும் பிராமணர்களைப் போலவே அவர்களிலும் சகபந்தி போஜனவிலக்குகளும் கொள்வனை கொடுப்பனை விலக்குதல்களும் தனித் தனி வேற்று



மைகளும் இருக்கின்றனவென்றும் பஞ்சமர்கள் முதலிய தாழ்ந்த ஜாதியார் விஷயத்தில் அவர்கள் செய்யும் அக்கிரமங்கள் பிராமணர்கள் செய்வதை விட அதிகமாயிருக்கின்றனவென்றும் ஆகையால் ஜாதியை ஒழிக்கும் சீர்திருத்தவேண்டுகோள் பிராமணஜாதிகளையும் பிராமணரல்லாத ஜாதிகளையும் அதாவது சென்னை மாகாணம் முழுதிலுமுள்ள சமூக மஹாஜனங்களைப் பார்த்துப் பிரார்த்திக்கப் பட்டிருக்கிறதென்றும் உபந்யாசத்தில் சொல்லியிருப்பதாலும் நான் இப்போது தென்னிந்தியாச் சென்னைராஜதானியில் சீர்திருத்தத்திற்கு உங்களால் ஆளாக்கப் பட்டிருக்கும் எல்லா ஹிந்துக்களுடைய சமூகத்தின் கணக்கைச் சொல்லிவிடுகிறேன் என்னவெனில்—

(1) சென்ற 1911 ௵ சென்ஸஸ் கணக்குப்படி சென்னை ராஜதானியின் ஜனத்தொகை

| | | |
|---|---|---|
| மொத்தம் | ... | 418 லக்ஷம் |
| ஹிந்துக்கள் | ... | 372 லக்ஷம் |
| முகம்மதியர்கள் | ... | 27½ லக்ஷம் |
| கிருஸ்துவர்கள் | ... | 12 லக்ஷம் |

(2) முகம்மதியராகிய 27½ லக்ஷம் ஜனங்களில் மெஜாரிடியான முஸலிம்கள் முன்னொருகாலத்தில் ஹிந்துக்களாயிருந்தவர்கள் என்றும் உருது பேசும் முகம்மதியர்கள் திராவிடர்களை நடத்தி வருவதில் பிராமணர்கள் நடத்தி வருவதுபோலவே செய்து வருகிறார்களென்றும் கர்நூல், அநந்தபூர் முதலிய பக்கங்களிலுள்ள முஸ்லிம்கள் ஹிந்துக்களைப் போலவே அனுஷ்டானத்தில் காணப்படுகிறார்களென்றும் சென்ஸஸ் ரிபோர்ட்டில் சொல்லப்பட்டிருக்கின்றது.

(3) கிருஸ்துவர்கள் 12 லக்ஷத்தில் ஹிந்து கிருஸ்துவர்களாகிய ரோமன் காதலிக்ஸ்கள் 7 லக்ஷம் ஆனபடியால் விக்ரஹாராதனைப் புத்தியும் கிருஸ்துவர்களுக்குள்ளேயே ஹிந்துஜாதிப் பிரிவினை வழக்கமும் அவர்களுக்குள் நீங்கவேயில்லை. மேற்கண்ட பாராக்களில் சொன்ன மொத்தம் 34½ லக்ஷத்தில் வெகுபேர்கள் ஹிந்து ஜாதி அநுஷ்டானத்தைக் கைவிடவில்லை. ஆகிலும் உங்களுக்கு அநுகூலமாகக் கக்ஷியை வாதிப்பதற்காகவே முகம்மதியர் கிருஸ்துவர் இவர்களில் ஹிந்து நடவடிக்கைப் புத்தி பதிந்திருப்பவர்களை மறந்து விட்டே மீதியைக்கணக்குப்பார்ப்போம்—

(4) ஹிந்துக்கள் 372 லக்ஷத்தில் பிருமணர்கள் 13 லக்ஷம்

| | | |
|---|---|---|
| பிருமணரல்லாதார் | 324 | ,, |
| சில்லரை | 4 | ,, |
| தீண்டாதபேர் | 31 | ,, |

(5) தீண்டாதபேர்கள் 31 லக்ஷத்தில் பள்ளர் 4.14 லக்ஷம்

| | | |
|---|---|---|
| பறையர் | 11.53 | ,, |
| செக்கிலியன் | 2.61 | ,, |
| வள்ளுவர் | 0.31 | ,, |
| மாலா | 7.47 | ,, |
| தீயர் | 3.16 | ,, |
| சிலுமர் | 1.21 | ,, |
| இழுவர் | 0.57 | ,, |

(6) மேற்சொன்ன முக்கியமான 8 வகைத்தீண்டாத பேர்களில் அவரவர் தான் தான் உயர்த்தி யென்றும் ஏனையோர் இளப்பமென்றும் எண்ணங்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் இந்த எட்டு வகைகளில் அதிகம் டிப்ரெஸ்ட் யாரென்றும் அதற்குக்குறைந்த அடுத்த படி டிப்ரெஸ்ட் யாரென்றும் வரிசைக்கிரமமே தெரி



யாமலிருக்கின்றது தங்களுக்குள் தகரார் தீர்ந்து கைதூக்கிக் காப்பாற்றப்படவேண்டிய அதிக டிப்ரெஸ்ட் வகுப்பார் யாரென்றும் கைதூக்கிவிடவேண்டிய அடுத்த மேற்படியாகிய குறைந்த டிப்ரெஸ்ட் வகுப்பார் யாரென்றும் இந்த யுகத்தில் தீர்க்க முடியாத காரியம். இந்த வித்தியாஸங்களைத்தீர்த்து எல்லாரையும் சமத்வப்படுத்த மனித ஆயுளே போறாது.

(7) பிருமணரும் பிராமணரல்லாதவரும் சேர்ந்து மொத்தம் 337 லக்ஷத்தில் ஆண்பிள்ளைகள் மாத்திரம் 204 லக்ஷம் இந்த ஆண்பிள்ளைகளில் முக்கியமான வகுப்புகளை மட்டும் எடுத்துச்சொல்லுகிறேன் என்னவெனில்

தெலுங்குதேசத்திய—காப்பு, கம்மா, பாலிகா, தெலகா, வேலாமா, ஸாததானி —29 லக்ஷம்

கொல்லா, பட்ராஜு, நாகராஜு, பெரிகி, ஸாலி, தேவாங்கி —3¼ லக்ஷம்

| | | |
|---|---|---|
| தெலுங்கு பிராமணர்கள் | ... | 2¼ லக்ஷம் |
| கோமுட்டிகள் | ... | 2½ லக்ஷம் |
| கெகுத்தராராஜு | ... | 1½ லக்ஷம் |
| கம்ஸாலா | ... | 1½ லக்ஷம் |
| மாலமாடிகா | ... | 11½ லக்ஷம் |
| தமிழ்தேசத்திய—வெள்ளாளர்கள் | | 12½ லக்ஷம் |
| கம்மாளர் | ... | 2¾ லக்ஷம் |
| சாணார் | ... | 3¼ லக்ஷம் |

செட்டிகள் ... $1\frac{3}{4}$ லக்ஷம்
தமிழ் பிராமணர்கள் ... $2\frac{1}{2}$ லக்ஷம்
பறையர்கள் ... $11\frac{1}{2}$ லக்ஷம்

(8) மேற்சொன்ன ஆண்பெண்களின் உட்பிரிவுகளிலும் அவர் அவர் பெரியவரென்றும் ஏனையோர் தாழ்ந்தவர் என்றும் எண்ணியிருக்கிறார்கள். காப்பு ஜாதியிலும் வெள்ளாழஜாதியிலும் மாத்திரமே 800 உட்பிரிவுகளும் ஹிந்துக்கள் மொத்தத்தில் 479 முக்கியமான உள்வகுப்புக்களிருக்கின்றன வென்றும் ஸென்ஸஸ் ரிபோர்ட் கூறுகின்றது. சிலர் 3000-க்கு மேற்பட்ட வகுப்புக்கள் இருக்கின்றனவென்கிறார்கள். ஸ்ரீவிலக்ஷணாநந்தஸ்வாமிகள் என்பவர் ஹிந்துமதத்தின் உட்பிரிவு 1500 என்றும் ஹிந்துமதத்தின் வெளிப்பிரிவுகள் 5000 என்றும் சில நாளைக்கு முன் சொல்லியிருக்கிறார்.—இவர்கள் எல்லாரும் கலந்து ஒருவிதமாய் ராஜி செய்துகொண்டு சமத்வமாகுதல் எங்க யுகத்திலோ ? இவர்களில் யார் யார் டிப்ரெஸ்ட் பண்ணப்பட்டிருக்கிறார்களென்பதற்குத் தாழ்ந்தது முதல் உயர்ந்தது வரையில் டிப்ரெஸ்ட் வகுப்பு அந்தஸ்து வாரிஜாப்தா தயார் செய்துகொடுக்க யாரால் முடியும்? அப்படியே ஒருக்கால் முடியும்பக்ஷத்தில் மேற்படி ஜாப்தாவில் எல்லாருக்கும் கீழாகப்பதியப்பட்டிருக்கும் ஜாஸ்தி டிப்ரெஸ்ட் ஜாதியையும் அதற்கடுத்த மேலுள்ள சற்றுக்குறைந்த டிப்ரெஸ்ட் ஜாதியையும் முதல்முதலில் ஒன்றாக்கி சமத்வத்தைக் கொடுத்துவிட்டு பிற்பாடு அந்த ஸங்கரக்கும்பலை அதற்கடுத்த மேல்ஜாதியோடொன்றாக்கி சமத்வத்தைக் கொடுத்துவிட்டு இப்படி முறையே கீழிருந்து மேல்நோக்கி ஒன்றின் பின் ஒன்றாய்க் கைதூக்கிக்கொண்டே வந்



தோமானால் கடைசியில் அந்த ஸங்கரஸமுத்திரத்தோடு ஜாப்தாவின் முதலில் பதியப்பட்டிருக்கும் உயர்ந்த ஜாதியை ஒன்றாக்கி ஏகஸமூக சமத்வம், செய்வித்தலானது இயற்கையான ஏற்பாடாயிருக்கும் இனி ஆசாரச் சீர்திருத்தச் சட்டங்கள் கீழான ஜனஸமூகத்திலிருந்து கிளம்பப் போகிறபடியால் ஜாதி சீர்திருத்தமும் சமத்வமும் கீழிருந்தே மேல்நோக்கி முன்னேற்றப்படுவது நியாயமாயுமிருக்கும். அப்படியில்லாது ஜாப்தாவின் கீழோர்களைத் தலையோர்களோடு அவசரப்பட்டு ஒன்றாக்கப் பிரயத்தினம் செய்தலானது பலிக்காத காரியமுமன்னியில் இப்போது டிப்ரெஸ்ட் கிளாஸ் என்று சொல்லிக்கொள்ளும் வகுப்பார்கள் டிப்ரெஸ்ஸிங் கிளாஸாக மாறிக்கொண்டேவந்து எங்கும் பொறுமைமிகுந்து விபரீதமான கலகமுண்டாகுமென்பதும் ஸத்யாக்கிரகம் கைக்கொள்ளப்படவேண்டிவருமென்பதும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.—

(9) ஆசாரச் சீர்திருத்த ஆசைப் படுவோர்கள் பெரும்பாலும் இங்கிலீஷ்ப் படித்தவர்களாகவே யிருப்பார்கள். ஆகையால் படித்தவர்களுடைய சங்கியையைக் கவனிப்போம். மொத்தம் 418 லக்ஷத்தில் 1918 ஆு எல்லா ஸ்கூல்களிலும் படிப்பவர்களின் சங்கியை 17 லக்ஷம்.

(10) 204 லக்ஷம் ஆள்களில் எந்தப்பாஷையிலாவது எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் 28 லக்ஷம்.

(11) 13 லக்ஷம் பிராமணர்களில் இங்கிலீஷ்ப் படிக்கத் தெரிந்த ஆள்கள் மாத்திரம் 1 லக்ஷம்.

(12) 359 லக்ஷம் பிராமணரல்லாதாரில் இங்கிலீஷ்ப் படிக்கத் தெரிந்த ஆள்கள் 1 லக்ஷம்.

(13) இவ்வளவு பேரும் அதாவது மொத்தம் 28 லக்ஷம் எழுதப்படிக்கத் தெரிந்த பேர்களும் நியூஸ் பேபர் படிப்பவர்களாகவே இருப்பதாய் வைத்துக் கொள்வோமானல் அவர்களில் 2 லக்ஷம் பேர்கள் தான் இங்கிலீஷ் நியூஸ் பேபர் படிக்கத் தெரிந்தவர்களாயும் மேல் கிளாஸ்களில் அதிகமாக இங்கிலீஷ்ப் படிப்பின் தீமைக்கு உட்படுத்தப் பட்டவர்களாயுமிருப்பார்கள். அதிலும் முக்கால்வாசிக்கு மேல் ஹிந்துமதம் ஜாதி ஆசாரம் இவைகளைக் கைவிட மனதில்லாதவர்களாகவே யிருப்பார்கள். சுதேச பாஷையில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களில் பெரும்பாலோர்களும் தாங்களிருக்கும் வகுப்புக்குக் கீழிரங்கவும் ஜாதியை ஒழித்துவிடவும் சம்மதிப் பட்டவர்களாக இருக்க மாட்டார்கள். ஆகவே ஜாதி ஏற்பாட்டை விலக்கச் சம்மதித்த வர்களின் சங்கியையை கார்த்தவீர்யார்ஜுனன் அறை நாழிகைக்குள் எண்ணி விடுவான். இவர்களின் சங்கியையானது ஹிந்துக்களின் மொத்தம் 372 லக்ஷஜனஸமூகக் கும்பலுக்கு உறைப்போடகாண்மாட்டாது. நான் சொல்வதின் உண்மையானது கிராமாந்திரங்களை ஒன்ருென்ருய் உள் நுழைந்து ஒவ்வொரு பாட்டி முதல் பேத்தி வரையில் குடும்பம் குடும்பமாய் அவாளவாளுடைய கிரஹஸ்த தர்மமிருக்கப்பட்ட விமரிசையையும் ஆசார அனுஷ்டானத்தையும் தாழ்ந்த வகுப்பாரும் உயர்ந்த வகுப்பாரும் இருக்கும் விகல்பமில்லாத அன்யோன்ய மறியாதையையும் கோவில் உத்ஸவகாலங்களில் தாழ்ந்த வகுப்பாருள்பட எல்லாரும் சேர்ந்து அனுபவிக்கும் பக்தி உத்ஸாகத்தையும் நேரில் பார்த்தால் விசதமாகும்.

(இன்னும் வரும்)

L. A. ரேங்கசாமி அய்யர்.

